Registered No. M. 2330.



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

"ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு"

மலர் ௬ | ஸ்ரீமுக ஆண்டு ஐப்பசித் திங்கள் 1933 ஆ அக்டோபர்மீ | இதழ் ௧௦

## அன்னிபெசண்ட் அம்மையார்

சென்ற 20-9-1933-ல் அன்னிபெசண்ட் அம்மையார் இவ்வுலகவாழ்வு நீத்தமை குறித்து ஆறாத்துயர் உறுகிறோம். அன்னிபெசண்ட் அம்மையார் உலகுக்கு ஒருவராக விளங்கிய பெருமைவாய்ந்தவர். அவ்வம்மையாரை உலக ஒளி என்று கூறல் மிகையாகாது. அவர் உழைப்பால் உலகம் பலதுறையிலும் ஒளிபெற்று வந்தது வெள்ளிடைமலை.

ஒருவர் ஒரு துறையில் வல்லவராயிருத்தல் இயல்பு; பலதுறையில் வல்லவராயிருத்தல் அரிது. அவ்வருமை அன்னிபெசண்ட் அம்மையாரிடத்து எளிமையாய் விளங்கலாயிற்று. அவர் பலதுறையிலும் வல்லமை பெற்றிருந்தனர். அவரைச் சகலகலாவல்லி என்று டாக்டர் மணிஐயர் போன்ற பெரியார்கள் போற்றியது பொருத்தமேயாகும். அன்னிபெசண்ட் அம்மையார் இளமையில் இல்வாழ்க்கையில் நுழைந்து மக்களையீன்று, பின்னே உயிர்களுக்குத் தொண்டு செய்வதில் ஊக்கங்காட்டி வந்தார். முதன்முதல் அன்னையார் ஏழை மக்கள் நலங்கருதி உழைக்கப் புகுந்தார். இங்கிலாந்தில் தொழிலாளர் இயக்கம் உருக்கொள்ளுதற்குக் காரணர்களா யிருந்தவர்களுள் அம்மையாரும் ஒருவர்.

மாதுஸ்ரீ பிளவட்ஸ்கி அம்மையாருடன் கூட்டுறவுகொண்டு பெசண்ட் அம்மையார் தியசாபிகல் சங்கத்தில் சேர்ந்தார். அச்சங்கத்திற்குக் கால்கொண்ட பெருமை பிளவட்ஸ்கி அம்மையாருடையது; அதற்குச் சுவரெழுப்பி நிலையங்கோலிய பெருமை பெசண்ட் அம்மையாருடைய தாயிற்று.

அன்னிபெசண்ட் அம்மையார் இந்தியாவிற்குச் செய்த திருப்பணி அளவிடற் பாலதன்று. தற்கால இந்தியா அடைந்துள்ள முன்னேற்றத்துக்

குப் பாடுபட்டுள்ள பெரியாருள் அன்னிபெசண்ட் அம்மையாரும் ஒருவர். ஜாதிவேற்றுமை, பெண்ணடிமை, தீண்டாமை முதலிய குறைபாடுகளைப் போக்க அன்னிபெசண்ட் அம்மையார் முன்னணியில் நின்று தொண்டாற்றியதை இந்தியா ஒருபோதும் மறவாது. இந்தியாவின் விடுதலைக்காக அம்மையார் புரிந்தபோரும், நிகழ்த்திய பணியும், உற்ற தியாகமும் இந்தியர் உள்ளத்தில் புத்தம் புதியனவாகப் பொறித்து கிடக்கின்றன. அம்மையார் இந்தியாவைத் தமக்குரிய உயிர் நாடாகக் கொண்டது ஈண்டுக் குறிக்கத்தக்கது.

அன்னிபெசண்ட் அம்மையார் ஒருசிறந்த கவி; உரைநடை எழுதுவதில் பேர்பெற்றவர்; நாவன்மையில் அவருக்கு ஒப்பாராதல் மிக்காராதல் உலகில் இல்லை. அவர் உலகுக்கு ஒருபெரும் நாவலராக விளங்கி வந்தனர். அவர் நிகழ்த்திய பணிகள்யாவும் நிஷ்காமியத்தின் பாற்பட்டன.

இத்தகைய அரிய மாணிக்கத்தை - நிஷ்காமிய கர்மயோகியை - உலகம் இழந்தது; இந்தியா இழந்தது. அம்மையாரின் பேச்சுகளும் எழுத்துகளும் பொதுவாக உலகிற்கும், சிறப்பாக இந்தியாவிற்கும் ஒளி வழங்கிக் கொண்டிருக்கு மென்பதில் ஐயமில்லை.

அம்மையாரின் நல்லுயிர் ஆண்டவன் அருளொளியில் அமைதி பெறுவதாக. சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

"நவசக்தி"

# திருவகுப்பு

முருகப் பெருமான் திருவருள் கைவரப்பெற்றுப் பதினைந்தாம் நூற்றாண்டில் நிகழ்ந்தவரும் சிவாநுபூதிச் செல்வருமாகிய அருணகிரிநாத சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய 'திருவகுப்பு' என்னும் அரிய நூலுக்கு, எமது தமிழ்ப்போதாகாசிரியர் ஒருவர் குறித்து வைத்த குறிப்புகள் எமக்குக் கிடைத்தன. அவைகளைச் செப்பனிட்டு "சித்தாந்தம்" வாயிலாக வெளியிடத் துணிந்தேம். பின்னர் இது புத்தக ரூபமாய் வெளிவரும். இவ்வுரையில் காணும் குற்றங்களைத் தமிழ்ப் பேரறிஞர் இப்பத்திராசிரியர் அவர்கட்கு எழுதவேண்டுகிறேன்.

[பெயர் விழையான்]

## திருவேளைக்காரன் வகுப்பு

ஆனபய பத்திவழி பாடுபெறு முத்தியது
வாகநிகழ் பத்தசன — வாரக் காரனும்
ஆரமது ரித்தகனி காரணமு தற்றமைய
னுருடனு ணக்கைபுரி — திமைக் காரனும்
ஆகமம்வி ளைத்தகில லோகமும் நொடிப்பளவி
லாசையொடு சுற்றுமதி — வேகக் காரனும்
ஆணவவ முக்கடையு மாவியை விளக்கியநு
பூதியடை விப்பதொரு — பார்வைக் காரனும்
ஆடலைவு பட்டமரர் நாடதுபி ழைக்கவம
ராவதிபு ரக்குமட — லாண்மைக் காரனும்
ஆடகவி சித்ரகன கோபுரமு கப்பிலகு
ளுபுரியி னிற்குமடை — யாளக் காரனும்

ஆயிரமு கத்துநதி பாலனும கத்தடிமை
யானவர்தொ டுத்தகவி மாலைக்கா ரனும்
ஆறுமுக வித்தகனு மாதிருபு யத்தாசு
மாதிமுடி வற்றதிரு நாமக் கார னும் ;
யானெனதெ னச்சருவு மீனசம யத்தெவரும்
யாருமுணர் தற்கரிய நேர்மைக் கார னும்
யாதுநிலை யற்றலையு மேழுபிற விக்கடலை
யேறவிடு நற்கருணை யோடக் கார னும்
ஏகமி டைக்கழிசி ராமலைதி ருப்பழநி
யோணிசெ ருத்தணியில் வாசக் கார னும்
ஏழையினி ரட்டைவினை யாயதொரு டற்சிறையி
ராமல்விடு வித்தருள்நி யாயக் கார னும்
யாமளைம ணக்குமுக சாமளைம ணிக்குயிலை
யாயெனவ ழைத்துருகு நேயக் கார னும்
ஏதமற நிச்சயம னோலயவி ளக்கொளியும்
யாகமுநி வர்க்குரிய காவற் கார னும்
ஈரிரும ருப்புடைய சோணமத வெற்பிவரும்
யானையள விற்றுவளு மாசைக் கார னும்
ஏடவிழ்க டப்பமலர் கூதளமு டிக்குமினி
யோனுமறி விற்பெரிய மேன்மைக் கார னும் ;
வானவர்பொ ருட்டுமக வானதுபொ ருட்டுமலர்
வாவியினு தித்தமுக மாயக் கார னும்
வாரணப திக்குதவு நாரணனு வக்குமரு
மானுமய னைக்கறுவு கோபக் கார னும்
வாழியென நித்தமற வாதுபர விற்சரண
வாரிசம ளிக்குமுப காரக் கார னும்
மாடமதில் சுற்றியத்ரி கூடகிரி யிற்கதிர்செய்
மாநகரி யிற்கடவு ளாயக் கார னும்
வாளெயிற துற்றபகு வாய்தொறுநெ ருப்புமிழும்
வாசுயெடுத்து தறும்வார வாசிக் கார னும்
வாளகிரி யைத்தனது தாளிலிடி யப்பொருது
வாகைபுனை குக்குடப தாகைக் கார னும்
மாசினுயி ருக்குயிரு மாசினுணர் வுக்குணர்வும்
வானிலனு வக்கனுவு பாயக் கார னும்
வாதனைத விர்த்தகுரு நாதனும்வெ ளிப்படம
காடவியி னிற்பதொர்ச காயக் கார னும் ;
மீனவனு மிக்கப்புல வோருமுறை பொற்பலகை
மீதமர்த மிழ்த்ரயவி நோதக் கார னும்
வேரிமது மத்தமதி தாதகிக டுக்கைபுனை
வேணியர்து திப்பதொரு கேள்விக் கார னும்

வேலைதுகள் பட்டுமலை சூரனுடல் பட்டுருவ
    வேலையுற விட்டதனி வேலைக் காரனும்
மீனலவு கிர்த்திகைகு மாரனுநி னைக்குமவர்
    விடுபெற வைத்தருளு தாரக் காரனும்
மேனியரி வைக்குரிய போரனும நித்தநிறல்
    வீரனும ரக்கர்குல சூறைக் காரனும்
வேதியர்வெ றுக்கையும நாதிபா வல்துவும்வி
    சாகனும்வி கற்பவிகு ரூபக் காரனும்
வேடுவர்பு னத்திலுரு மாதிமுனி சொற்படிவி
    யாகுலம னத்தினொடு போம்விற் காரனும்
மேவியபு னத்திதனி லோவியமெ னத்திகழு
    மேதகு குறத்திதிரு வேளைக் காரனே.

ஆன - உயிர்களுக்கிதமான; பயபத்தி வழிபாடு - பயபக்தி வழிபாட்டினுல்; பெறும்- பெறுதற்குரிய ; முத்தி ஆக - முத்தியுண்டாக; நிகழ் - முயல்கின்ற ; பத்தசனம் - பக்த ஜனங்களிடத்தில் ; வாரக்காரனும் - அன்புடையவனும்; ஆர - மிகுதியாக; மதுரித்த - இனித்த ; கனிகாரணம் - (மாங்)கனி காரணமாக; முதல் - முற்காலத்தில் ; தமையனுருடன் - தன் தமையனுராகிய விநாயகருடன் ; உணக்கை புரி - வாது செய்த; நிமைக்காரனும் - நிமையையுடையவனும் ; ஆகமம் விளைத்து - ஆகமநூல்களை யுண்டாக்கி; அகில லோகமும் - எல்லாவுலகங்களையும் ; நொடிப்பளவில் - நொடிப்பொழுதில் ; ஆசையொடு சுற்றும் - விருப்பத்தோடு சுற்றிவந்த ; அதி வேகக்காரனும் - மிகு வேகத்தை யுடையவனும் ; ஆணவ அழுக்கு அடையும் - ஆணவமலத்தை யடைந்த ; ஆவியை - உயிரை ; விளக்கி - விளங்கச் செய்து ; அநுபூதி - சுவாநுபவத்தை ; அடைவிப்பது - உயிர்கள் அடையச்செய்வதாகிய ; ஒரு - ஒப்பற்ற ; பார்வைக்காரனும் - கருணைநோக்க முடையவனும் ; ஆடி அலைவுபட்ட - சலனத்துக் கேதுவாகிய துன்பமடைந்த ; அமரர் நாடு பிழைக்க - தேவலோகம் பிழைக்கும்படி ; அமராவதி புரக்கும் - அமராவதிப் பட்டணத்தைக் காக்கின்ற ; அடல் ஆண்மைக்காரனும் - வலியை ஆளுதலுடையவனும்; ஆடகம் - பொன்னினுற் செய்யப்பட்ட ; விசித்ரம் - ஆச்சரியகரமான ; கனம் - பெரிய - கோபுர முகப்பில் - கோபுர வாயிலில் ; அருணபுரியில் - அருணைமாநகரத்தில் ; நிற்கும் - நிலைபெற்றிருக்கின்ற ; அடையாளக்காரனும் - அடையாள முடையவனும் ; ஆயிரம் முகத்து - ஆயிர முகத்தையுடைய ; நதி பாலனும் - கங்கா புத்ரனும் ; அகத்து அடிமை ஆனவர் - அகத்தொண்டு பூண்டவர்; தொடுத்த - புனைந்த; கவி மாலைக்காரனும் - கவி மாலையை யுடையவனும் ; ஆறு முகம் - ஆறு முகங்களை யுடையவனும் ; வித்தகனும் - ஞான வடிவனும் ; ஆறு இரு புயத்து அரசும் - பன்னிரண்டு புயங்களையுடைய அரசனும் ; ஆதி முடிவு அற்ற - முதலும் முடிவு மில்லாத ; திருநாமக்காரனும் - திருநாமத்தை யுடையவனும். வ

யான்எனதுஎன - யான் எனது என்று ; சருவும்-அபிமானிக்கிற; ஈன சமயத்து- இழிவான சமயங்களையுடைய; எவரும் - யாவரும்; யாரும் - மற்றெல்லாரும்; அறிதற்கு அரிய-அறிதற்கருமையாகிய; நேர்மைக்காரனும் - நேர்மையுடையவனும்; யாதும் - எந்த சமயத்திலும் ; நிலையற்று அலையும் - நிலைக்காமல் அலைகின்ற ; எழு பிறவிக்கடலை - எழ் பிறவியாகிய கடலினை; எறவிடும் - கடத்துகிற ; நல் - நன்மையாகிய; கருணை - கிருபை என்கிற ; ஓடக்காரனும் - ஓடத்தையுடையவனும் ; ஏரகம் - திருவேரகத்திலும் ; இடைக்கழி-திருவிடைக்கழியிலும்; சிராமலை - திரிசிரா மலையிலும் ; திருப்பழனி திருப்பழனியிலும்; ஏர்அணி - அழகையுடைய ; செருத்தணியில் - திருத்தணிகையிலும் ; வாசக்காரனும் - வாழ்பவனும்; எழையின்-எழையாகிய எனது ; இரட்டை வினையாயது - இரு வினையாகிய ; ஒரு உடற்சிறை - ஒரு உடம்பாகிய சிறையில் ; இராமல் - தங்கியிராமல்;

விடுவித்து அருள் - அடியார்களை விடுவித்தருளுகிற ; நியாயக்காரனும் - நிறையையுடையவனும் ; யாமளை - யாமளையும் ; மணக்கும்-பரிமளிக்கிற ; முகம் - முகத்தையுடைய ; சாமளை - சாமளையும் ஆகிய ; மணிக்குயிலை - உமாதேவியை ; யாய்என - என் தாயே என்று ; அழைத்து உருகும் - அழைத்துருகுகிற ; நேயக்காரனும் - அன்புடையவனும் ; ஏதம்அற - குற்றமற ; நிச்சயம் - உறுதியாகிய ; மனேலய விளக்கொளியும் - மனேலயமாகிய தீபப்ரகாசமும் ; யாகமுனிவர்க்கு உரிய - யாகஞ்செய்யு முனிவர்க்குத் தகுந்த ; காவற்காரனும் - ரக்ஷகனும் ; ஈரிரு மருப்புடைய - நான்கு கொம்புகளையுடைய ; சோனை - சோனைமழை போன்ற மதத்தைப் பொழியும் ; மதம் வெற்பு - மதமலை மேல் ; இவரும் - ஏறுகிற ; யானை அளவில் - யானையினிடத்தே ; அவளும் - அவளுகின்ற ; ஆசைக்காரனும் - ஆசையையுடையவனும், ஏடு அவிழ் - இதழ் விரிந்த ; கடப்பமலர் - கடப்பமலரையும் ; கூதளம் - கூதாளியையும் ; முடிக்கும் - முடித்துக் கொள்ளுகிற ; இளையோனும் - குமாரனும் ; அறிவில் பெரிய - ஞானத்தாற் சிறந்த ; மேன்மைக்காரனும் - மேம்பாடுடையவனும். உ

வானவர் பொருட்டும்-தேவர்கள்பொருட்டும் ; மகவானது பொருட்டும் - இந்திரன் பொருட்டும்; மலர்வாவியில் - சரவணப் பூம்பொய்கையில் ; உதித்த - அவதரித்த ; முகமாயக்காரனும் - முகமாயத்தையுடையவனும்; வாரணபதிக்கு-கஜேந்திரத் தாழ்வானுக்கு; உதவு-உதவின ; நாரணன் - திருமால்; உவக்கும் - சந்தோஷித்தற்குரிய; மருமானும் - மருகனும் ; அயனை - பிரமனை; கறுவு - சினந்த ; கோபக்காரனும் - கோபத்தையுடையவனும்; வாழிஎன - வாழியென்று ; நித்தம் - நாள்தோறும் ; மறவாது - மறவாமல் ; பரவின் - வழிபட்டால் ; சரணவாரிசம் அளிக்கும் - தன் திருவடித் தாமரையைத் தருகிற; உபகாரக்காரனும்-உபகார குணமுடையவனும் ; மாடம்மதில் சுற்றிய - மாடமாகிய மதிலாற் சூழப்பட்ட ; த்ரிகூட கிரியில் - த்ரிகூட மலையில் ; கதிர்செய் - ஒளி செய்கிற ; மாநகரியில் - பெரிய நகரத்தில் ; கடவுள் ஆயக்காரனும் - தெய்வத் தன்மையுள்ள ஆயக்காரனும் ; வாள் எயிறது உற்ற - ஒளி பொருந்திய பல்லினையுடைய; பகுவாய்தொறும் - பிளவுபட்ட வாய் தோறும் ; நெருப்பு உமிழும் - நெருப்பைக் கக்குகிற ; வாசு - வாசுகிஎன்னும் சர்ப்பத்தை; எடுத்து உதறும்-கொத்தி உதறுகிற ; வாசிக்காரனும்-மயில் வாகனத்தையுடையவனும் ; வாளகிரியை - சக்ரவாள பர்வதத்தை ; தனது தாளில் இடியபொருது - தனது காலினாலிடியப் போரிட்டு ; வாகைபுனை - வெற்றி மாலையைத் தரித்த ; குக்குடம் - கோழியாகிய ; பதாகைக்காரனும் - கொடியை யுடையவனும் ; மாசில் உயிருக்குயிரும் - குற்றமில்லாத உயிருக்குயிரும் ; மாசுஇல் - குற்றமில்லாத ; உணர்வுக்கு உணர்வும் - அறிவுக்கறிவும் ; வானில் - ஆகாயத்தில் ; அணுவுக்கு அணு - அணுவுக்கணுவுமாகிய ; உபாயக்காரனும் - தந்திரக்காரனும் ; வாதனை தவிர்த்த - மலவாதனையை யொழித்த ; குருநாதனும் - ஆசாரியனும் ; வெளிப்பட - வெளிப்படையாக ; மகாடவியில் - பெருங்காட்டில் ; நிற்கும் - நிற்கிற ; ஓர் - ஒப்பற்ற ; சகாயக்காரனும் - உதவி செய்வோனும் ந

மீனவனும் - பாண்டியனும் ; மிக்க புலவோரும் - சிறந்த புலவர்களும் ; உறை - வீற்றிருக்கிற; பொற்பலகைமீது அமர் - பொற்பலகையின்மீது அமர்ந்த; தமிழ்த்ரயமும்-முத்தமிழையுடைய; விநோதக்காரனும்-விநோதத்தையுடையவனும்; வேரிமதமத்தம்-வாசனையும் தேனுமுள்ள ஊமத்தத்தையும் ; அதிதாதகி - மேன்மையாகிய ஆத்தியையும் ; கடுக்கை - கொன்றை மாலையையும் ; புனை - தரித்த ; வேணியர் - சடைமுடியையுடைய சிவபெருமானர் ; துதிப்பது - தோத்திரஞ் செய்தற்குரிய ; ஒரு - ஒப்பற்ற ; கேள்விக்காரனும் - உபதேசமுடையவனும் ; வேலை தகர்பட்டு - கடல் பொடிபட்டு; மலைசூரன் உடல்பட்டு உருவ - கிரவுஞ்ச மலைமேலும் சூரன் உடல்மேலும் பட்டுருவும்படி ; வேலை உறவிட்ட - வேற்படையை மிகுதியா யேவின ; தனி வேலைக்காரனும் - ஒப்பற்ற சேவகனும் ; மீன்உலவு - மீன் வடிவாயுலாவுகிற ; கிர்த்திகை குமாரனும் - கிருத்திகைக்கு மகனும் ; நினைக்குமவர் - தன்னை நினைப்பவர்கள் ; வீடுபெற - முத்தி

யுடைய ; வைத்தருள் - வைத்தருள்கிற (கிருபை பாலிக்கிற) உதாரக்காரனும் - உதார குணத்தை யுடையவனும் ; மேனை அரிவைக்கு உரிய பேரனும் - மேனாதேவிக்குகந்த பேரனும் ; மதித்த - யாவராலும் மதிக்கப்பட்ட ; திறல்வீரனும் - வெற்றி வீரனும் - அரக்கர் குலம் - அரக்கர் குலத்தை ; குறைக்காரனும் - குறையிட்டவனும் ; வேதியர் வெறுக்கையும் - அந்தணர் செல்வமும் ; அநாதிபர வஸ்துவும் - அநாதியாகிய மேலான பொருளும் ; விசாகனும் - விசாகனென்னும் திருநாமமுடையவனும் ; விகற்பம் - வேறுபாடுடைய ; வெகு ரூபக்காரனும் - அநேக உருவுடையவனும் ; வேடுவர் புனத்தில் - வேடர் புனத்தில் ; உருமாறி - உருவமாறி ; முனி சொற்படி - முனிவனது சொல்லின்படி ; வியாகுல மனத்தினொடு - கவலையுள்ள மனத்துடனே; போம்-போன ; வில்காரனும் - வில் வீரனும் ; மேவியபுனத்து - பொருந்திய தினைப்புனத்து; இதணில் - பரண்மீது ; ஓவியமென - சித்திரப்பாவை யென்னும்படி ; திகழும் - பிரகாசிக்கிற ; மேதகு - மேன்மையமைந்த ; குறத்தி - குறப்பெண்ணின் ; திருவேளைக்காரனே - தற்சமயம் பார்த்துழல்வோனாகிய முருகவேளே யாவன் என்றவாறு.

**குறிப்புக்கள் :**—திருவேளைக்காரன் வகுப்பு - திரு+வேளைக்காரன்+வகுப்பு என்னும் மூன்று சொற்களினாலாய ஒரு தொடர். திரு - அழகு ; வேளைக்காரன் - சமயத்துக்கு உதவுபவன். வேளை, சமயம், காலம் என்பன ஒரு பொருட்சொற்கள். இதனை 'காலை செவ்வி போழ்து அமையம் கால் பதம் மூன்று - எல்லையொடு, வேலை தருணம் சமயம் **வேளை** சொன்னேரம் பொழுது - காலம் அன்னம் பாணியுமாங் காண்' என்னும் நாமதீப நிகண்டால் (555) அறிக. வகுப்பு - பிரிவு. எனவே அழகிய சமயத்துக்கு உதவுபவனைப்பற்றிக் கூறும் பிரிவு என்பது பொருள். சமயத்துக்கு உதவுபவன்-யார்யாருடைய சமயத்துக்கு உதவுவது என்னும் வினா வெழுமன்றோ? கூறுதும்: வள்ளியம்மையாருடைய சமயத்துக்கு உதவுபவன் தமிழ்க் கடவுளாகிய முருகப் பெருமான் என்பது போதருகின்றது. 'முடங்குந் திரைப்பரவை வயிறு உளைந்து ஈன்றநறு முளரிப் பிராட்டி வைத்து - முத்தாடு பச்சைப் பசுங்கிள்ளை யெனமழலை மொழிதிருமென் குதலை கற்பத் - தொடங்குங் குறப்பாவை கற்றைக் குழற்கு அகில் தூமமொடு தாம மிட்டுச் - சுடிகைநுதல் வெயர்வு துடைத்தெழுது கத்தூரி தூரியங்கொண்டு தீட்டிக் - குடங்கைக் கடங்கா நெடுங்கட் கடைக்கு அழகு கூர அஞ்சனமெழுதி மென் - கொங்கைத் தடத்தும் பசுங்களபம் அப்பி அவள் **குற்றேவல்** முற்றும் மாற்றித்-தடங்குங்கு மப்புயங் கொட்டிநட மிட்டவன் சப்பாணி கொட்டி யருளே - தையலொருபாகருவு தெய்வ நாயகன் மதலை சப்பாணி கொட்டி யருளே' (முத்து - பிள்ளைத்தமிழ் - சப்பாணி—1) 'பமரம் மடுப்பக் கடாம் எடுத்து ஊற்றுமோர் பகடு நடத்திப் புலோமசைச் சூர்ப்புயல், பருகியிடக்கற்ப காடவிப் பால்பொலி பரவை யிடைப்பதும மாதெனத் தோற்றிய - குமரியிருக்கக் கலாமயிற் கூத்தயர் குளிர்புன மொய்த்திட்ட சாரலிற் போய்ச்சிறு, குறவர் மகட்குச் **சலாமிடந்து** எக்கறு குமரனை முத்துக் குமரனைப் போற்றுதும்' (மீனாக்ஷி - பிள்ளை - காப்பு—4) என்னும் ஆன்றோர் வாக்குகளால் முருகப் பெருமான் வள்ளிநாச்சியாருக்குச் செய்யவேண்டிய குற்றேவல்களைச் செய்து முடிப்பதில் மிக்க ஆர்வமுடையவர் என்பது போதருகின்றதன்றோ? 'பணியாவென வள்ளி பதம்பணியும்- தணியா அதி மோக தயாபரனே' (கந்தரநுபூதி) என்பதும் அது. எனவே, அழகிய (வள்ளியம்மையாரின்) சமயத்துக்கு உதவுபவனாகிய முருகப் பெருமானின் பெருமையை விரித்துக் கூறும் பிரிவு என்பது பொருள். 'விறன் மறவர் சிறுமிதிரு வேளைக் காரப் பெருமாளே' (திருப்புகழ் - 166) 'விந்தை குறமாது வேளைக்கார' (திருப்புகழ்-41) 'வித்து விளைபுனமும் வேய்முத் தீனும் வெற்ப முறையுமயில் வேளைக்காரப் பெருமாளே' (திருப்புகழ் - 10267) 'சுத்த மறவர்மகள் வேளைக்காரப் பெருமாளே' (திருப்புகழ் - 1026). யாம் இற்றைக்கு முப்பத்தைந்து வருடங்கட்கு முன்னர் இந்த வேளைக்காரன் வகுப்பை வாசித்தபோது 'வேளைக்காரன்' என்பதற்குப் பொருள் செவ்வனே

விளங்காமல் இடர்ப்பட்டனம். அப்போது திரிசிரபுரம் மகா வித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை யவர்கள் மாணவர் விராலிமலை சுவாமியார் என்னும் பெரியாரைச் சந்திக்க நேர்ந்தது. அவரை இத்தொடர்க்குப் பொருள் யாதென வினவினேம். அப்பெரியார் தாமும் இத்தொடர்க்குப் பொருள் விளங்காமல் தமது ஆசிரியரைக் கேட்டனர் என்றும் அவர் ஆசிரியர் 'சமயத்துக்கு உதவுபவன்' என்று பொருள் சொல்லியதாகவும் எம்மிடம் பகர்ந்தனர்.

(a) ஆன பயபக்தி - வாரக்காரனும் :—(1) ஒருமுருகா வென்று உள்ளங்குளிர உவந்துடனே - வருமுருகா வென்று வாய்வெருவா நிற்பக் கையிங்ஙனே - தருமுருகா வென்று தான்புலம்பா நிற்பத் தையல்முன்னே - திருமுருகாற்றுப் படையுடனேவருஞ் சேவகனே (தனிப்பாடல்).

(b&c) ஆரமதுரித்தகனி - வேகக்காரனும் :—(1) கொம்பனைய வள்ளி கொழுநன் குறுகாமே - வம்பனைய மாங்கனியை நாரையூர் - நம்பனையே, தன்னவலஞ் செய்துகொளும் தாழ்தடக்கை யாய்எங்கோய் - பின்னவலஞ் செய்வதெனோ பேச (நம்பியாண்டார் விநாயகர் இரட்டை மணிமாலை செய் - 3). (2) யாவரா யினுமிக் கனிவிழைந்து ளோர்கணத்தில் - பூவலாய் கொடுவருதி ரேலவர்க் கெனப்புகலத் - தூவியம் பசுந்தோகைமா மஞ்ஞைமேல் தோன்றித் - தேவர் சேனை காவலன் கிரியிழிந்து பார் சேர்ந்தான் (30). (3) ஈசனுருகி மடியினில்வைத் தென்று மிளையோ யறிவுடையை - தேசுதருநம் வானுதற்கண் மணிநீ சிறுவ னேபெரியை - வாசநறுமென் கனியும் ஒரு கனியோ மதுர மொழிவாயால் - பேசரிய மறைஞானப் பிள்ளைபழம் நீயெனப் புகன்றார் (56). இதன் விரிவை பழநித் தலபுராணம் - திருவாவினன்குடிச் சருக்கத்தில் பரக்கக் காண்க. (4) அண்டமெலாம் வலம்புரிந்தான் அறுமுகவன் கரிமுகவன் அறிவாவாய்த்திட்டு - எண்டிசைக்குஞ் சிவனிறைவன் சிவனையல்லா துலகுயிரு மில்லையென்றே - மண்டியவன் பாலெழுந்து வலம்புரிந்தான் மகிழ்ந்திறைமாங் கனியளித்தான் - கண்டவிரு வகையாலும் கன்மபல ஞானபலங் காணலாமே. (வள்ளலார் சாத்திரம் பதி பசு பாச விளக்கம் - 2). (5) இகலிமுது திமிரிகிரி நெறியவனி கடல்கதற எழுபுவியை ஒருநொடியில் வலமாக ஓடவரும் (சீர்பாத வகுப்பு). (6) முதிய தினகர இடுகொள் வலம்வரும் - உலக முழுதொரு நொடியினில் வலம்வரு பெருமாளே (திருப்புகழ் - 1009).

(d) ஆணவஅழுக்கு - பார்வைக்காரனும்:—(1) விந்துமோகினி மாவென விரிந்த-தத்துவக் காட்டில் தனித்திடும் உயிரை - ஆணவ வேங்கை ஒருபால் அடர்ப்ப - மாயைக் குடாவடி ஒருபான் மயக்கக் - காமியக் கடமா ஒருபாற் கறுவ - இருவினை மலைப்பாம்பு ஒருபா விழுக்க - அசையா மன்னை ஒருபா லறையக் - குலமெனு ஞமலி ஒருசார் குரைப்பக் - கல்விக் கானியாறு ஒருசார் கவாச் - சமயச் சூறை ஒருசார் தாக்க - அவாவெனும் படுதீ அறிவைக் கொருவ - மாயாவாத வனசரர் வெருட்ட - இன்னணம் ஆவி இடருறுங் காலை - உயிரிடை ஒளிபுக் கிருந்த ஒருவாத் - தாயினுஞ் சாலத் தயாநிதி இரங்கிக் - கட்கடை வாளால் காடற மாற்றலும் - உட்கின யாவும் உயிர்பிழைத் தன்றே. (வள்ளலார் சாத்திரம் - சத்தியஞான போதம் - 8).

(e) ஆடலவு - ஆண்மைக்காரனும் :—(1) மாயையின் வலியோ னுகி மான்முதலோரை வென்றே - ஆயிரத்தோ ரெட்டு அண்டம் அரசுசெய்துஉக நூற்றெட்டுக் - காயம தழிவின்றாகிக் கடவுளர்க் கிடுக்கண் செய்த-தீயசூர் முதலைச்செற்ற குமரன்தாள் சென்னி சேர்ப்பாம். (கந்தபுராணம் - கந்த - தக்ஷ - உபதேச - செய் - 1). (2) அன்னவன் றின்னடி யடைந்து நிற்கொடே - தன்னலர் தமதுயிர் தொலைத்துத் தொன்மைபோல் - தன்னர செய்தவுந் தலைவனாகவும் - முன்றினன் பிறிது வேறு ஒன்றும் முன்னலான் (3) பற்பிகலருந்தவம் பயின்று வாடினன் தற்பாசரவணத்தடத்திற் போந்த உன் - உற்பவ நோக்கியே உவகை பூத்தனன் - சொற்படு துயரெலாம்

தொலைத்தனனென (கந்தபுராணம். உற்பத்தி. திருவிளை. 67, 68) (4) வேதன் எங்கே அவன் தாதை எங்கே விண்ணில் நண்ணுபுரு - கூதனெங்கே தேவரெங்கே குறையாதவப் - போதர் எங்கே அறமாதி எங்கே திருப்போரியில் வாழ் - நாதன் எங்கோன் அவரைப்போலச் சூரையும் நாடிடிலே (சந்நிதிமுறை அலங்காரம் (58) அண்டர்கள் ஊர்குடி ஏறவும் மண்டியசூர்பொடியாகவும் - அங்கையிலாழியில் வேல்விடுமொருரா (விரிஞ்சைமுருகன் பிள்ளைத்தமிழ் - தால்.(8)

(b) ஆடக - அடையாளக்காரனும் :—(1) அடலருணைத்திருக்கோபுரத்தே அந்த வாயிலுக்கு - வடவருகிற் சென்று கண்டுகொண்டேன் வருவார் தலையில் - தடபடெனப்படு குட்டுடன் சர்க்கரை மொக்கிய கைக் - கடதடகும் பக்களிற்றுக்கிளைய களிற்றினையே (கந்தாலங்காரம் செய் 1) (2) அருணநெடுங்கோபுரத்தமர்ந்த அறுமுகப் பெருமானே (திருப்புகழ் 567)

(g) ஆயிரமுகந்து நதிபாலனும் :—'ஈங்கனம் நமது கண்ணின் எய்திய குமரன் கங்கை - தாங்கினள்கொண்டு சென்று சரவணத்திடுதலாலே - காங்கெயனெனப்பேர் பெற்றான் காமர்பூஞ்சரவணத்தின் - பாங்கரின் வருதலாலே சரவணபவன் என்றுளான்' (கந்த - உற்பத்தி - திருவிளை. 16)

(h) ஆறுமுகவித்தகனும் ஆற்றுபுயத்நாகமும்:—(1) முழுமதியன்னவாறு முகங்களு முக்காண்காளும் - விழிகளினருளும் வேறும் வேறுள படையின் சீரும் - அழகிய காமிராறும் அணிமணித் தண்டை யார்க்குஞ்-செழுமல ரடியுங் கண்டான் அவன்தவஞ் செப்பற்பாற்றே (கந் - உற்பத்தி. தாரகன்வதைப்படலம். 126) (2) ஆறிருதடந்தோள் வாழ்க அறுமுகம் வாழ்க வெற்பைக் கூறுசெய்தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க - செவ்வேள் - ஏறிய மஞ்ஞை வாழ்க யானைதன் அணங்கு வாழ்க - மாறிலாவள்ளி வாழ்க வாழ்க சீரடியாரெல்லாம் (கந்த.- தக்ஷ-வள்ளி - திரு - 261) (3) சோமகிரணப் பெருங் கருணைசாந்த முகங்கள் ஓராறும்-சுருதிவமுத்தும் பன்னிரண்டு தோளும் நீபத்தொடை மார்பும் (திருப்போரூர் சந்நிதிமுறை - பெருங்கழி நெடில். 1.)

(h) ஆதிமுடிவற்ற திருநாமக்காரனும் :—(1) 'ஊரிலான் குணங்குறியிலான் செயலிலான் உரைக்கும்-பேரிலான் ஒரு முன்னிலான் பின்னிலான் பிறிதோர் - சாரிலான் வால் போக்கிலான் மேலிலான் தனக்கு - நேரிலான் உயிர்க்கடவுளாய் என்றுளே நின்றான். (கந்த - அசுர - மாயைப் - 1 ) 2 இறுதியு முதலுமில்லா இப்பெருவடிவந்தன்னைக் - கறைவிடம் உறழுஞ்சூரன் கண்டு விம்மிதத்தி னிற்ப' (கந்த - யுத்த. சூரபன்பன் பன்வதை. 430.)

(i) யான்என - நேர்மைக்காரனும் :—(1) 'தத்தமாற்றங்கள் நிறுவிய சமயிகள் பலரும் - கத்துபுன் சொலை வினவினர் அவன் செயல்காணார் - சுத்தவாதுள முதலிய தந்திரத்தொகுதி - உய்த்துணர்ந்திடு நீரரே ஒரு சிறிது உணர்வார்' (கந்த - மகேந்திர-சூரன்-அமைச்சு 126)

(j) யாது நிலையற்றநிலை-ஒடக்காரனும் :—(1) 'காரார் பிறவிக்கடலைக் கடத்தும் என் கன்மனத்தை - நீராயுருக்கும் என்றீயேர் முடிநிறைந்திருண்ட - ஈராமலப்பிணி தீர்த்திடும் உன்றன் திருவடியே - தாரார் பொழில்புடைசூழ் சமரபுரிச் சண்முகனே திருப்போரூர்ச் சந்நிதிமுறை - கட்டளைக் கலித்துறை - 9.)

(k) ஏரக - வாசக்காரனும் :—பழநி திருத்தணி அருணை இடைக்கழி பழமுதிர் பொற்கிரி அலைவாயோர் பனிமலை சற்குரு மலையொடு பற்பல பனிமலை உச்சியிலுறைவோனே (விரிஞ்சி - முருகன் பிள்ளைத்தமிழ் - சிற்றில் - 8.)

(m) யாமளை - நேயக்காரனும் :—'அநகை, அநபவை அநநயை அபிநவை அதலமுதலெழுதல மிவை முறை முறை - அடைய அருளிய பழையவன் அருளிய சிறியோனே (திருப்புகழ் 1007).

(n) யாகமுனிவர்க்குரிய காவற்காரனும் :—ஒருமுகம் - மந்திர விதியின் மரபுளி வழாஅ - அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே. (திருமுருகாற்றுப்படை - வரி - 94&96)

(o) ஈரிரு மருப்புடைய - ஆனைக்காரனும் :—மறுவில் கற்பின் வாணுதல் கணவன் (திருமுருகாற்றுப்படை - வரி 6.)

(p) மடவிழ் - இளையோனும் :—(1) சுருக்கமுஞ் சந்தியும் புறப்பூங் கடம்பும் (திருமுருகாற்றுப்படை - வரி 225) (2) பூக்குங்கடம்பா முருகாகதிர்வேலா (தனிச்செய்யுள் 1). (3) அடவியில் விராவு தளவலர் அளவு குராமகிழ் கோடல்பாடல் அளிமூசல் செச்சை அலங்கல் செங்கடம்பு நேசித்து அணிந்தன (புயவகுப்பு) (4) கோடலுமாத் தொடு குரவுஞ் செச்சையுஞ் சூடியகுமா (கந்தபுரா - உற்பத்தி - திருவிளை 69.)

(q) வானவர் - மாயக்காரனும் :—அருவமும் உருவுமாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப் - பிரமமாய் நின்ற சோதிப்பிழம்பதோர் மேனியாகக் - கருணைகூர் முகங்களாறுங் கரங்கள் பன்னிரண்டுங் கொண்டே - ஒரு திருமுருகன் வந்தாங்கு உதித்தனன் உலகமுய்ய (கந்த - உற்பத்தி - திருஅவதாரம் - 92.)

(r) வாரணபதிக்குதவு - மருமானும் :—'கிருத னிருபது வாடிபூதாமும் மகுடமொருபது முறிய அடுபகழி விடுகுரிசில் மருகன்' (சீர்பாத வகுப்பு).

(s) அயனைக்கறுவு கோபக்காரனும் :—'ஓமெனும் எழுத்திற் பிரமம் பேசிய நான்மறை விதியை நடுங்கு சிறைவைத்து' (கல்லாடம் - சுப்பிரமணியர் துதி . வரி - 43&44).

(t) வாழியென - உபகாரக்காரனும் :—'குமார நமாவென்று கூறினர் ஓர்கால் - அமரா வதியாள்வ ரன்றி - யமராசன் கைபுகுதார் போரூரன்கால் புகுவார் தாயுதரப் - பைபுகுதார் சேரார்பயம் (திருப்போரூர் சந்நிதிமுறை - மாலை - 47).

(u) வாளெயிறு - வாசிக்காரனும் 'உரகமது எடுத்தாடுமே காரமீதின் மிசைவர வேணும் (திருப்புகழ்).

(y) மீனவனும் விநோதக்காரனும்:—மணிக்கா லறிஞர் பெருங் குடித்தோன்றி, இறையோன் பொருட்டுப் பரணர் முதல் கேட்ப பெருந்தமிழ் விரித்த அருந்தமிழ்ப் புலவனும் பாய்பாரிய நீயேயாதலின் (கல்லாடம் சுப்பிரமணியர் துதி வரி - 52&53).

(z) வேணியர் துதிப்பதொரு கேள்விக்காரனும்:—உழ்ன்மதில் சுட்ட தழனகைப் பெருமான் - வணங்கி நின்றேத்தக் குருமொழிவைத்தோய் (கல்லாடம் சுப்பிரமணியர் துதி வரி 41&42).

(a) வேலைதுகள் வேலைக்காரனும் :—'பார்முதிர் பனிக்கடல் கலங்க உள்புக்குச் சூர்முதல் தடிந்த சுடரிலை நடுவேல்' (திருமுருகாற்றுப்படை வரி - 45&46).

(b) மீனுலவு கீர்த்திகை குமாரனும் :—(1) முருக சரவண மகளிர் அறுவர் முலை நுகரும் அறுமுக' (சீர்பாத வகுப்பு) ஞாலமேத்த வழிபடும் அறுபேர்க்கு மகவென நாணல் பூத்த படுகையில் வருவோனே' (திருப்புகழ் 1214) 3 முதல்வ பார்ப்பதி புதல்வ கார்த்திகை முலைகள் தேக்கிட உண்ட வாழ்வே' (திருபுகழ் செய் - 1016) (4) 'மறுவறு மாராரு மாதர் மூவிருவர் தாமும் - நிறைதரு சரவணத்தில் நிமலனை அடைந்து போற்ற - உறுநர்கள் தமக்கு வேண்டிற்று உதவுவோன் ஆதலாலே - அறுமுக ஒருவன் வேறாய் அறுசிறார் உருவங் கொண்டான்' (கந்த - உற் - திருஅவதாரம் செய் - 110).

(d) வேதியர் வெறுக்கை :—அந்தணர் வெறுக்கை (திருமுருகாற்றுப்படை வரி - 293).

(e) வேடுவர் - விற்காரனும் :—(1) உலைப்படு மெழுக தென்ன உருகியே ஒருத்தி காதல் - வலைப்படுகின்றான் போல வருந்தியே இரங்கா நின்றான் - கலைப்படு மதியப்புத் தேள் கலங்கலம் புனலிற் றோன்றி - அலைப்படு தன்மைத் தன்றோ அறுமுக னுடல் எல்லாம். (கந்த - தக்ஷ - வள்ளிதிரு - 73).

குறத்தி திருவேளைக்காரனுகிய (f) முருகப் பெருமான் வாரக்காரனும் (a) நிமைக்காரனும் (4)...விற்காரனும் (e) ஆக விளங்கி அடியவர்கட்கு அருள்வான் என்று இயைத்துப் பொருள் கொள்க.

# திருக்கோவையாரில் கண்ட தலங்கள்

[C. M. இராமச்சந்திர செட்டியார், பி. ஏ., பி. எல்.]

மலர் 6, இதழ் 9, 216-ம் பக்கத் தொடர்ச்சி

### 8. மூவல்

இத்தலத்திற்கு இரண்டு பாடல்கள் இருக்கின்றன. (செ. 191-ல்) "மூவல் தழீஇ அருள் முதலோன்" என்று சிவபெருமானையும், (செ. 306-ல்) "மூவலே ஒப்பாள்" என்று தலைவியையும் குறிக்கிறார். ஆகவே அது ஒரு சிவத்தலமாக இருக்கவேண்டும். பின் செய்யுளில் வரகுணனைப் பற்றி "வரகுணனும் தென்னவனுல் ஏத்தப்படும் சிற்றம்பலம்" என்று கண்டிருக்கிறது. (செ. 327-ல்) மயல் ஓங்கு இரும் களியானை வரகுணன் என்று கண்டிருக்கிறது. இவ் வரகுணன் பெயரைக் கொண்டுதான் மணிவாசகனார் காலத்தை ஆராய்ச்சி செய்வர்.

மூவல் என்ற இத்தலம் சோழநாட்டில் உள்ளது. கல்வெட்டுகளால் சிறப்பு வாய்ந்தது.

### 9. திருப்பெருந்துறை.

இத்தலத்திற்கும் இனிவருவன வற்றிற்கும் ஒவ்வொரு பாடல்தான் உண்டு. இத்தலத்தைத் தற்காலத்து ஆவுடையார் கோயில் என்பர். "பெருந்துறைப்பிள்ளை" என்று தலைவியை (செ. 104-ல்) குறித்ததைத் தவிர, வேறு மேற்கோள் கிடையாது. மணிவாசகப் பெருமான்தான் திருஅருள் பெற்ற இடத்தைக் குறித்து அதிகமாக ஏன் இந்நூலில் போற்றவில்லையோ தெரியாது. அது குறிஞ்சியைச் சேர்ந்திராதது ஒரு காரணமாக இருக்கலாம். ஆனுலும் மற்ற திணைகளும் துறைகளும் வந்தபோது பாடியிருக்கலாம் அல்லவா? திருவாசகத்திலேயோ 20 பதிகங்கள் இத்தலத்திற் பாடப் பெற்றதாகத் தெரிகின்றது. இத்தலத்திற்கு மூவர் பாடல் கிடையாது. ஆனுல் ஆது வைப்புத்தலமாக இருக்கிறது. திருவாசகத்தில் சிவபுராணம், திருச்சதகம் முதலிய முக்கிய பகுதிகள் இத்தலத்தில் பாடப்பெற்றவை.

### 10. திருக்கழுக்குன்று.

இது தொண்டை நாட்டில் உள்ள ஒரு பாடல்பெற்ற திருத்தலம். திருக்கழுக்குன்றில் குளிர்ந்த நறிய தாதுபரந்த சந்தனச் சோலையிடத்து பந்தாடும் தலைவியைக் குறிக்கின்றார். இவ்வியற்கையழகு வாய்ந்த இம்மலையின் ஈசனைக் குறித்து மணிவாசகனார் திருவாசகத்தில் "பிணக்கிலாத" என்ற திருக்கழுக்குன்றப் பதிகத்தை அருளி யிருக்கின்றார். மேலும் இதனை "கழுக்குன்றதனில் வழுக்கா திருந்தும்" என்கிறார். இத்தலத்திற்கு மூவர்களும் மூன்று பதிகங்கள் பாடியிருக்கின்றார்கள்.

### 11. திருஈங்கோய்மலை.

இது சோழநாட்டுப் பாடல்பெற்ற தலம். 'அரன் தங்கும் ஈங்கோய் மலையில் பெரிய புனத்தை அழித்து தலைவியை நோக்கிவந்த மலைபோன்ற

யானையைத் தோற்பித்தான்' என்கிறார். இதனால் இம்மலையில் தினைப்புனங்களும் அவற்றை யானை அழித்தலும் உண்டு எனப்புலப்படும். இதனை திருவாசகத்தில் "ஈங்கோய் மலையில் எழிலது காட்டியும்" என்கிறார். இத்தலம் திருஞானசம்பந்த சுவாமிகளால் ஒரு பதிகம் பாடப் பெற்றது. காவிரியின் கரையில் உள்ளது.

12. திருப்பனையூர்.

இது சோழ நாட்டிலுள்ள பாடல்பெற்ற தலம். உம்பர் சென்று வாழ்த்தி நிற்றற்கு இடமாம் திருப்பனையூர் (செய். 137-ல்) என்கிறார். திருப்பனையூருக்கும் அப்பாடலில் உள்ள பொருளுக்கும் உள்ள சம்பந்தம் தெரியவில்லை. இத்தலத்தைக் குறித்துத் திருவாசகத்தில் "திருப்பனையூரில் விருப்பனாகியும்" என்கிறார். சம்பந்தமூர்த்திகளாலும், சுந்தரமூர்த்திகளாலும் இரண்டு பதிகங்கள் பாடப்பெற்றன.

13. திருக்கோடுங்குன்று.

இது பாண்டிநாட்டுப் பாடல்பெற்ற தலங்களில் ஒன்று. தற்போது பிரான்மலை என்று பெயர் வழங்குகிறது. கொடுங்குன்றினது நீண்ட குடுமியின்மேல் உண்டாகிய தேனை விரும்பும் முடவனைப்போல் (செய். 150-ல்) என்ற உவமை கூறுகிறார். இதைப்பற்றியும் திருவாசகத்தில் தனிப்பதிகம் கிடையாது.

சம்பந்த சுவாமிகளால் ஒருபதிகம் பாடப்பெற்றது.

14. சிவநகர்.

தில்லை அம்பலவாது சிவகிரியில் நற்றளிர் உண்டு. (செய். 209-ல்) எனக் கூறுகிறார். சிவபுரி என்ற ஒரு சோழநாட்டுத் திருப்பதி கும்பகோணத்துக்கு அருகில் இருக்கிறது. அந்தத் தலமாகவும் இருக்கலாம்; அல்லது சிவபுரி என்று வழங்கும் திருநெல்வாயிலாகவும் இருக்கலாம். இது சிதம்பரத்திலிருந்து தென்கிழக்கு 1½மைலில் உள்ளது. முன்னதற்கு 4 தேவாரப் பதிகங்களும் பின்னதற்கு ஒரு பதிகமும் உண்டு.

15. கடம்பை.

இது சோழநாட்டுத் திருப்பதி. குளிர்ந்த கடம்பையில் உள்ள பொய்கைபோல (செ. 220-ல்) என உவமை காட்டுகிறார். இதனை திருவாசகத்தில் "கடம்பூர் தன்னில் இடம்பெற இருந்தும்" என்கிறார். இவ்வாலயம் கரக்கோயில் எனப்பெயர் பெறும். மூன்று பதிகம் உண்டு. அப்பர் "நங்கடம்பனை ............என்கடன் பணிசெய்து கிடப்பதே" என்கிறார்.

16. திருஇடைமருது.

திருவிடைமருதூர் என்பது சோழநாட்டுத் திருப்பதி. (செய். 268-ல்) இதன் பெயர் மாத்திரம் ஏகம்பம் வாஞ்சியம் இவற்றோடு சேர்த்துக் கூறப்பெற்றுள்ளது. 12 பதிகங்கள் உண்டு. "இடை மருததனில் ஈண்ட இருந்து படிம்ப் பாதம் வைத்த அப்பரிசு" என்பதும் "அருள் எனக்கிடைமருதே யிடங்கொண்ட அம்மானே" என்பதும் திருவாசகத் திருவாக்குகள்.

## 17. ஏகம்பம்

இது காஞ்சிபுரம். மேலே சொன்ன (செய். 268-ல்) கூறப்பெற்றுள்ளது. 12 பதிகங்கள் உண்டு. தொண்டை நாட்டுத்தலை நகர். "ஏகம்பத்தில் இயல்பா யிருந்து பாகம் பெண்ணோடாயின பரிசும்" என்றார்.

## 18. வாஞ்சியம்.

மேலே கண்ட (செய். 268-ல்) கூறப் பெற்றுள்ளது. சோழநாட்டுத் திருப்பதி. பதிகங்கள் (3) உண்டு. "திருவாஞ் சியத்தில் சீர் பெறஇருந்து மருவார் குழலியோடு மகிழ்ந்த வண்ணமும்'! என்கிறார். இம்மூன்று தலங் களையும் சேர்த்துத் திருக்கோவையிலும் கீர்த்தித்திருவகவலிலும் கூறியதன் நோக்கம் தெரியவில்லை.

## 19. திருச் சுழியல்.

இது பாண்டி நாட்டுத் தலங்கள் பதினான்கில் ஒன்று. மதுரைக்குத் தென் கிழக்கில் உள்ளது. "சுழியலின்கண் தன்பெடை வருந்தத் தகுதி கெட்டு அன்னம் சலஞ்சலத்தினது வலிய மேடைமேல் கிடந்துறங்கும் வயலால் சூழப்பட்ட ஊர்" என்கிறார். (செய். 377-ல்) இதற்கு சுந்தாருடைய பதிகம் ஒன்று உண்டு.

## 20. காழி

இது சீகாழி எனவழங்கும். ஈசனுறைகின்ற காழியை ஒப்பாள் எனத் (செ. 379-ல்) தலைவியைப் பாராட்டுகிறார். திருவாசகத்தில் பிடித்த பத்து இங்கு அருளப்பட்டது. "கழுமல மதனில் காட்சி கொடுத்தும்" என் கிறார்.

இது திருஞானசம்பந்தர் அவதரித்த தலம். தேவாரப் பதிகங்கள் 21 உண்டு.

## 21. மேரு

இது மாமேரு மலை. 26-ம் செய்யுளில் "வில்வினை மேருவில் வைத்த வன்" என்று கூறுகிறார். இது தனித்தலமாகக் கொண்டாடப் பெறவில்லை.

ஆகவே திருக்கோவையாரில் கண்ட இந்த 21 தலங்களைப் பற்றியும் ஆராயும் கால், 4 தலங்கள் திருவாசகப் பதிகங்கள் பெற்றவை என்றும் 13 தலங்கள் திருவாசகத்தில் கூறப்பெற்றவை, அதாவது திருவாசக வைப்புத் தலங்கள் என்றும் அறியலாம். திருவாசகப் பதிகம் பெற்றவை தில்லை, பெருந்துறை, கழுக்குன்று, காழி (தோணிபுரம்) என்பன. திருவாசகத்தில் கூறப்பெற்றவை பரங்குன்று, குற்றாலம், பூவணம், கூடல், பெருந்துறை, கொடுங்குன்று, ஈங்கோய்மலை, திருப்பனையூர், கடம்பை, இடைமருது, ஏகம் பம், வாஞ்சியம், காழி (கழுமலம்) என்பன. திருவாசகத்தில் காணாது திருக் கோவையாரில் மாத்திரம் கண்டவை 4. அவை, மலயம், மேரு, சிவநகர், மூவல் என்பன. திருக்கோவையாரில் காணாததும் திருவாசகப் பதிகம் பெற்றது மான தலங்கள் மூன்றாகும். அவை உத்தரகோசமங்கை, திருவண்ணாமலை, திருவாரூர் என்றவை. இந்த இருபத்தொரு தலங்களில் பாண்டி நாட்டில் கூடல், பூவணம், கொடுங்குன்று, பெருந்துறை, குற்றாலம், மலையம்,

பாக்குன்று, சுழியல்; ஆக 8 தலங்களும்; சோழநாட்டில் தில்லை, ஈங்கோய்மலை, திருப்பனையூர், சிவநகர், கடம்பை, இடைமருது, வாஞ்சியம், காழி, மூவல் ஆக 9 தலங்களும்; தொண்டை நாட்டில் கழுக்குன்றம், ஏகம்பம் என்ற இரண்டும்; வடநாட்டில் கயிலை, மேரு ஆக இரண்டும் ஆக 21 தலங்கள் நாட்டு வரிசையாக இருக்கின்றன. ஆகவே மணிவாசகனார் பாண்டி மண்டலத்திலும், சோழ மண்டலத்திலும் அதிகமாக விஜயம் செய்துள்ளார் என ஊகிக்கலாம். இது அவரது சரித்திர வகையிலும் தெளிவாகத் தெரிகின்றது.

# முதல்வன்

## சத்தி, பராசத்தி, பதி, ஆதி, இச்சை, ஞானம், கிரியை என்னும் நாமங்களைக் கொண்ட காரணமும் பிறவும்

[ச. பொன்னுஸ்வாமி குருக்கள், சுதுமலை, யாழ்ப்பாணம்.]

சிவம், ஆன்மா என்னும் சித்துப் பொருள்களுள்ளும் வேறுபாடு இருக்கின்றது. ஆன்மா தூலசித்து; சிவம் சூக்குமசித்து. அன்றியும், சிவம் ஆன்மாவுக்கு ஆன்மாவாயிருக்கும். சிவம் தானே யுணருஞ் சித்து; ஆன்மா அச்சிவத்தினல் உணர்த்தப்படுஞ் சித்து. சிவம் இவ்வெண்ணில்லாத ஆன்மாக்களிலும் வியாபித்து அறிவுக்கறிவாய் நின்றுணர்த்தும்; ஆன்மாக்கள் அச்சிவத்தின் உபகாரத்தால் அறிவுபெற்று விளங்கும். அது ஒரே சூரியன் அளவில்லாத கண்களுக்கு விளக்கஞ் செய்வதுபோலாம்.

என்றும் ஞானசொரூபமாயும் ஆநந்த மயமாயும் விளங்கிக்கொண்டிருத்தல் சிவத்தின் இலக்கணம்.

ஆன்மாவுக்கு இந்த இலக்கணமில்லை. பளிங்கைப்போல எதை அடுத்ததோ அதன் தன்மையைத் தன் தன்மையாகக் கொள்ளுகிற ஓர் இயல்பு ஆன்மாவுக்குண்டு. இந்த இயல்புள்ள ஆன்மா அநாதியே தனக்கு உயிராயுள்ள சிவத்தைப் பற்றாது தனக்கு வேறாய்ச் சடமாயுள்ள மலத்தைப் பற்றி நின்றது. அந்த மலத்துக்கும் ஆன்மாவுக்குமுள்ள சம்பந்தமாகிய தொடர்பு சகசமென்று சொல்லப்படும். ஆன்மா அநாதியே சிவத்தைப் பற்றியிருந்தால் சிவத்தின் குணமாகிய ஞானநந்த நிலையை அடையும். அப்படியின்றி ஆன்மா அநாதியே மலத்தைப் பற்றியபடியால், மலம் தன் குணமாகிய அறியாமையைக் கொடுக்க, ஆன்மா அறிவிருந்தும் அறியாது மயங்குவதாயிற்று. கண் எல்லாவற்றையுங் காணும் இயல்புடையதாயினும், இருளிலகப்பட்டபொழுது ஒன்றையுங் காணமாட்டாமைபோல, ஆன்மா அறிவுடையதாயினும் மலத்தின் வயப்பட்ட இக்நிலையில் ஒன்றும் அறியாதிருக்கும்.

ஒவ்வோர் ஆன்மாவுக்கு ஒவ்வோர் ஆணவமலமாய் எண்ணில்லாத ஆன்மாவுக்கு எண்ணில்லாத மலம் இருந்துமறைப்பதல்ல. எண்ணில்லாதனவாகிய கண்களை ஒரே இருள் எப்படிமறைக்கிறதோ, அப்படியே எண்

